உ

# தஞ்சை மாவட்டத்துள்ள சில ஸப்த ஸ்தான தலங்கள்







அவனருள் வெளியீடு 65
பிப்ரவரி 2000
அறப்பிரசுர விலை ரூ. 1.00

உ

# தஞ்சை மாவட்டத்துள்ள சில ஸப்த ஸ்தான தலங்கள்

















அவனருள் வெளியீடு 65
பிப்ரவரி 2000
அறப்பிரசுர விலை 1.00

பொருளடக்கம்

உ

# அவனருள் வெளியீடு - ஒரு அறிமுகம்

மீனாட்சியின் மதுரையின் கிழக்கே, மாரியம்மன் தெப்பக்குள மேற்குக் கரையில் உள்ள, எனை ஆட்கொண்ட ஸ்ரீ மரகதவல்லி முக்தீசுவரர் அருளால் 22-6-88 புதனன்று காஞ்சி பரமாச்சாரியார், ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அளித்த பணி ஆயுட்பணியாக வளர்ந்து விட்டது.

1008 சிவாலயங்களைப் பற்றித் துவங்கிய ஆய்வு, அகிலத்துள்ள சர்வ ஆலயங்களைப் பற்றியும், சர்வேஸ்வரனைப் பற்றியும் அறிவதையே வாழ்க்கையாக்கி விட்டது.

அவ்வாழ்வில், அறிய வாய்த்ததை, அருகில் உள்ளோரோடு மட்டுமின்றி, எட்ட இருப்போரோடும் பகிர்ந்து கொள்ளும் முயற்சிகளே அவனருள் வெளியீடுகள்.

ஆலய வரலாறுகள், திருத்தல வழிகாட்டிகள், கோயிற்களஞ்சியங்கள், திருப்பெயர்த் தொகுப்புகள், தமிழில் அர்ச்சனைத் துதிகள், வழிபாட்டு முறை விளக்கங்கள், தத்துவ விளக்கங்கள், கலாச்சாரக் கோட்பாடுகள், இறைவனைப்பற்றி – அவன் ஆலயங்களைப் பற்றி வினா – விடைகள், தத்துவ அறிமுகங்கள் என்று இதுவரை, 60க்கும் மேற்பட்ட நூல்கள் அவனால் எழுதுவிக்கப்பட்டு வெளியாகியுள்ளன.

தொடர்ந்து, தன்னைப் பற்றியும், தன்னுள் ஒன்ற முயன்ற அடியவர்களைப் பற்றியும், அருளாளர்கள் தாம் பெற்ற பேற்றை, பாமரர்க்கும் புரியும் வகையில், எழுதி வைத்த நூல்கள் பற்றியும், அவனிடம் இட்டுச் செல்லும் இன்னும் பிறவற்றைப் பற்றியும், பல்லோரும், மென்மேலும் அறிந்திடச் செய்வது, நம்மை ஈர்த்து, ஆட்கொண்டு, இமைப்பொழுதும் நீங்காத அவன் பொறுப்பு.

– அவனருள்

# முன்னுரை

கார்த்திகை தீபத்திருவிழாவும், ஷஷ்டி நோன்பும், மாசி மகத் தீர்த்தமாடுதலும் தமிழகத்தில் பல ஊர்களிலும் சிறப்பாக நடைபெறுகின்றன. ஆயினும்,
**மகாமகம்** என்றால் **கும்பகோணம்** நினைவுக்கு வருகிறது.
**தீபம்** என்றால் '**திருவண்ணாமலையை** நினைக்கிறோம்.
**கந்த ஷஷ்டி** என்றவுடன் **திருச்செந்தூரை** எண்ணுகிறோம்.

அது போலவே, **ஸப்தஸ்தான விழா** என்றவுடன், நம் எல்லோருக்கும், தஞ்சை மாவட்டத்துள்ள **திருவையாறு** தான் முதலில் நினைவுக்கு வந்தாலும், இன்னும் பல க்ஷேத்ரங்களிலும் **ஏழூர்த் திருவிழாக்கள்** நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

பரப்பளவில் மிகவும் குறைந்து விட்ட, இன்றைய தஞ்சாவூர் மாவட்டத்தின், வடமேற்குபகுதியில் மட்டுமே, ஏழு ஏழூர்த்திருவிழா கொண்டாடப் பெற்றுள்ளன. திருவாரூர், நாகை மாவட்டங்களிலும் ஏழூர்த் திருவிழா நடந்திருப்பது தெரிகிறது. தமிழகத்துள்ள பிற மாவட்டங்களிலும் கொண்டாடப்பட்டிருக்கும்.

முதல் படியாக, இன்றைய தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஏழூர்த் திருவிழாக்களோடு தொடர்புடைய தலங்களையாவது எல்லோரும் அறிய வேண்டுவதே இந்நூலின் நோக்கம்.

இன்று நாம் **முப்பெரும் விழா, ஐம்பெரும் விழா** என்று பலவற்றை இணைவித்து நடத்தும் நிகழ்ச்சிகளும், **நவக்ரஹ க்ஷேத்ர** வழிபாடு, **பஞ்சபூதத் தலங்கள்** பிரயாணம் **12 ஜோதிலிங்க** தரிசனம், **அறுபடை வீடு** தரிசனம் குறிப்பிட்ட ஊர்களைப் பார்க்கும் **சுற்றுலா** போன்றவையும் முன்காலத்தில் நடைபெற்று வந்த பல்லூர்த் தொடர்புடைய திருவிழாக்களின் தொடர்ச்சியே.

சைவத்தில் மட்டுமின்றி, வைணவத்திலும் பல்லூர் மூர்த்திகள் ஒன்றுகூடி எழுந்தருளும் திருவிழாக்கள் நெடுங்காலமாக நடைபெறுகின்றன. உதாரணமாக **ஆழ்வார் திருநகரியை** மையமாக்கி **நவகருட சேவை விழா** சீர்காழியின் அருகுள்ள, **திருநாங்கூர்** பகுதியில் **11 கருட சேவை விழா, தஞ்சை** நகரை ஒட்டி **21 கருட சேவை விழா** நடப்பதையும் முக்கியமானதாகக் குறிப்பிடலாம்.

கோயில்களின் பெருக்கமும், திருவிழாக்களின் விரிவாக்கமும் அதிகரிப்பும், மனித சமுதாய வரலாற்றோடு பின்னிப் பிணைந்திருப்பதை இங்கே கருத வேண்டும்.

இறைத் திருவுருவங்களுக்கு **திருக்கோயில்கள் உருவானதும்**, அங்குள்ள மூர்த்திகளுக்கு உத்ஸவ விக்ரஹம் செய்து, ஊரின் தெருக்களில் எல்லாம் ஒவ்வொரு வீட்டின் முன்பும் எழுந்தருளச் செய்யும் **பெருவிழாக்கள் உருவானதும்,** பல்லூர் மக்களும், பல்லூர் மூர்த்திகளும் பல்லூருக்குச் செல்லும் **ஏழூர்த் திருவிழா உருவானதும்,**

அனைத்து ஊர் மக்களிடையே உறவையும், ஒற்றுமையையும் அன்பையும் நிலைப்பிப்பதற்காகவே.

பல்லூராரை இணைவிக்கும் திருவிழாக்களில் மூன்று முக்கியமானவை. மதுரை, அழகர்கோயில் போன்ற திருத்தலங்களில், ஒரு ஊர் இறைவன், அருகுள்ள ஊர்களுக்கு எழுந்து அருளுவது முதல் வகை. கும்பகோணம், மாயூரம் போன்று புனித நீராடலுக்கு முக்கியத்துவம் அளிக்கும் தலங்களில், ஆறு, குளம் அல்லது கடற்கரைக்கு, ஒரே இடத்திற்கு, பல்லூர் மூர்த்திகள் எழுந்தருளுவது இன்னொரு வகை.

முதல் வகையில் வேறு ஊரிலிருந்து நம்மூர் வரும் மூர்த்தியை தரிசிக்கிறோம். அடுத்ததில், ஒரே இடத்தில் கூடியுள்ள பல்லூர் மூர்த்திகளை தரிசிக்கிறோம்.

திருவையாற்று ஏழூர்த் திருவிழா போன்றவை மேலும் தனிச்சிறப்பு பெற்றவை. நம்மூருக்கு வரும் மூர்த்தியையும் தரிசிக்கிறோம். நம்மூர் மூர்த்தியையும் எழுந்தருளச் செய்து மற்ற ஊர்களுக்கு செல்கிறோம். பல்லூராரும், பல்லூர் மூர்த்திகளும் பல்லூர்களில் கூடும் வாய்ப்பு ஏற்படுகிறது.

பள்ளிப் பேருந்துகள் ஒவ்வொரு தெருவும் சென்று மாணவரை அழைத்துச் செல்லும் போது பல்பகுதி மாணவரும், பல்தெருக்களையும் அறிவதை போல, ஏழூர்த் திருவிழாவில் பங்கு பெறும் எல்லா ஊர்மக்களும் பல்லூர் மக்களுடன் ஒற்றுமையாக இருக்கப் பழகி விடுகின்றனர்.

லக்ஷக்கணக்கான மக்களை சங்கமிக்கச் செய்து குடும்ப ஒற்றுமை, தெரு ஒற்றுமை, ஊர் ஒற்றுமை, நாடு ஒற்றுமை, உலக ஒற்றுமை போன்ற எல்லா வித ஒற்றுமைகளையும் ஒரு சேர நிலைப்பிக்கின்ற ஏழூர்த் திருவிழா போன்றவற்றில் மறவாமல் கலந்து கொள்வோம். அத்தகு விழாக்கள் பொருளாதாரக் குறைவினால் நின்று விட்டிருப்பின் அவற்றை மீண்டும் நடத்த முற்படுவோம்.

பழனியாண்டவனுக்கு மட்டுமே முதலில் காவடி எடுக்கப்பட்டாலும், இன்று பல்லூர் முருகனுக்கும் காவடி எடுத்து பயனடைவது போல, ஐயப்பனுக்கு மட்டுமே இருமுடி கட்டிச் சென்ற நிலை மாறி, இன்று மருவத்தூருக்கும் முடி கட்டிச் செல்வது போல, இதுவரை பல்லூரும் கூடி திருவிழா நடக்காத பகுதிகளிலும் அத்தகு திருவிழாக்களை நடத்திப் பயன்பெறுவோம்.

திருமணத்தன்று சப்தபதி (புதுமணத் தம்பதியர் கை பிடித்து ஏழு அடிகள் நடப்பது) என்ற சடங்கின் மூலம், கணவனும், மனைவியும் எக்காலமும் ஒற்றுமையாயிருக்கப் பழகுவது போல, எல்லா ஊர் மக்களும், அவரவர்க்கு அருகிலுள்ள ஏழு ஊர்களை இணைத்து திருவிழா நடத்தி சமுதாய ஒற்றுமையை பெருக்குவோம்.

இடம் கருதி தலங்களுக்கு சில குறிப்புக்களே உள்ளன. அவ்வவ்வூரில் வசிக்கும் அன்பர் மூலம் எல்லா செய்திகளையும் கொண்ட பெருநூல் ஆக்குவது அவன் பணி. - அவனருள்

# I. திருவையாற்றுடன் சேர்ந்த ஸப்தஸ்தான க்ஷேத்ரங்கள்

1. **திருவையாறு** :- தஞ்சைக்கு வடமேற்கு 11 கிமீ. **ஸ்ரீ பஞ்சநதீஸ்வரர் (ஐயாரப்பர்) கோயில்.** அப்பருக்கு சிவனார் கயிலாய காட்சியளித்த பதி. வெளியூர் சென்றிருந்த அர்ச்சகருக்காக **ஈசன் தன்னைத்தான் பூஜித்த தலம்.** கண்ணனை எடுத்துச் சென்ற வசுதேவர்க்காக யமுனாநதி வழிவிட்டது போல, சுந்தரர்க்கும், சேரமானுக்கும் காவிரி வழிவிட்ட பதி. சுசரிதன் என்ற பக்தனை சிவனார் தன் ஜோதிக்குள் ஆட்கொண்ட தலம். மூலவரின் தென்புறமும், வடபுறமும், தென் கயிலாயம், வட கைலாயம் என்ற இரு சன்னதிகள். குங்கிலியம் இட்டு வணங்கப் பெறும் **'ஆட்கொண்டார்'** சன்னதி சிறப்பு. **தியாகராஜ சுவாமிகளை,** அவரின் இராம பக்தியை நினைக்க செய்யும் பதி. சப்தஸ்தானத்தில் முதன்மைப் பதி. அம்பாள் திருமால் அம்சம் என்பதால் அருகில் பெருமாள் ஆலயம் இல்லை. **சுயம்பு மூர்த்தி.** அப்பர் முழுகி எழுந்து கயிலைக்காட்சி பெற்ற திருக்குளம் **உப்பங்குளம்** எனப்படுகிறது. **தருமையாதீன நிர்வாகம். (தேத) (திபுத),** 613 204.

ஓதி யாருமறி வாரில்லை ஓதி உலகெலாம்
சோதி யாய்நிறைந்தான் சுடர்சோதியுட் சோதியான்
வேதி யாகிவிண் ணாகி மண்ணோடு எரி காற்றுமாய்
ஆதி யாகி நின்றானும் **ஐயாறுடை ஐயனே.**

**2. திருப்பழனம்** :- திருவையாற்றின் வடகீழ் (குடந்தை வழி) 3 கிமீ. **ஸ்ரீ ஆபத்சகாயர் கோயில். அப்பூதியடிகளின்** பெருமையை அப்பர் போற்றிய பதி. அப்பர் தொண்டாற்றிய தலம். குபேரன், திருமால், இலக்குமி பணிந்தது. கௌகிகர் தவமாற்றிய பதி. தும்பைப் பூமாலை சாற்றுவது சிறப்பு. திருநாமஜபம் செய்வதின் பயனை சீக்கிரமே அருளும் தலம். **சுதாபுஷ்கரிணி** என்ற திருக்குளம் நோயும், பாவமும் தீர்க்க வல்லது. தஞ்சை அரண்மனை நிர்வாகம் **(தேத) (தி.வை.த.)** 613204.

மண்பொருந்தி வாழ்பவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும்
விண்பொருந்து தேவர்க்கும் வீடுபேறாய் நின்றானைப்
பண்பொருந்த இசைபாடும் **பழனம்** சேர் அப்பனை என்
கண்பொருந்தும் போதத்துங் கைவிட நான் கடவேனோ

**3. திருச்சோற்றுத்துறை** :- கண்டியூரின் கிழக்கு 2கிமீ. **ஸ்ரீ சோற்றுத்துறை நாதர் கோயில்.** பசி தீர்க்கும், பஞ்சம் தவிர்க்கும் தலம். மக்கள் பசி தீர்த்திட, திருவீழிமிழலையில் ஈஸ்வரன் நாயன்மார்களிடம் பொற்காசு வழங்கியது போல, இங்கும் ஒரு பக்தரிடம் **அக்ஷயபாத்திரம்** அளித்து பஞ்ச கொடுமை தீர்த்த தலம். சப்தஸ்தானத்தில் 3வது பதி கௌதமர் வழிபட்டது. இந்திரன், சூரியன் பூஜித்தது. **(தேத) (தி.வை.த.)** வரப்ரஸாதியான வேலவர் சன்னதி. 613202.

இலையால் அன்பால் ஏத்தும் அவர்க்கு
நிலையா வாழ்வை நீத்தார் இடமாம்
தலையால் தாமும் தவத்தோர்க் கென்றே
தொலையால் செல்வச் **சோற்றுத் துறையே.**

**4. திருவேதிகுடி :-** கண்டியூரின் தென்கிழக்கே 3கிமீ. **ஸ்ரீ வேதபுரீசுவரர் ஆலயம்.** வேதங்கள் வணங்கிய பதி. சப்தஸ்தானத்தில் 4வது. வாழை மடுவில் தோன்றிய ஈசன். சைதன்ய முனி தவமியற்றியது. பங்குனி 13,14,15ல் சூரிய பூஜை. வேதநாதத்தை விடாமல் கேட்பதற்காக, செவி சாய்த்திருக்கும் வேதவிநாயகர். சம்பந்தர் இங்கு பாடிய "நீறுவரி ஆடரவொடாமை மனமான்பு நிறை பூண்பரிடபம்" என்று துவங்கும் பதிகத்தில் "உன்னிரு போதும்" என்ற பாடலைப் பாராயணம் செய்திட, திருமணத்தை சீக்கிரமே கூட்டுவிக்கும் தலம். (தேத) (திவைத) 613202.

எண்ணும் எழுத்தும் குறியும் அறிபவர் தாமொழிய
மண்ணின் இசைமொழி பாடிய வானவர் தாம் பணிவர்
திண்ணென் வினைகளைத் தீர்க்கும் பிரான் திருவேதிகுடி
நண்ண அறிய அமுதனை நாமடைந்தோமே.

**5. திருக்கண்டியூர் :-** திருவையாற்றின் தெற்கு 3 கிமீ. **ஸ்ரீ பிரமசிரக்கண்டீசர் கோயில்.** சப்தஸ்தானத்தில் 5வது. சாதாப முனிவர்க்கு காளத்தி தரிசனம் அளித்த பதி. அட்ட வீரட்டத்தலங்களுள் ஒன்று. பிரமனின் அகந்தையைக் களைய, அவனது 5 தலைகளில் ஒன்றை நீக்கிய தலம். தலமரம், வில்வம் கயிலையிலிருந்து கொணரப்பட்டது. மேற்குப் பார்த்தது. மும்மூர்த்தித் தலம். ஆழ்வார்கள் பாடிய திவ்யதேசம். பங்குனி 13,14,15 நாட்களில் மாலை 5.45-6.10 வரை சூரியஒளிபூஜை. (தேத) (திவைத) 613202.

மாய்ந்தன தீவினை மங்கின் நோய்கள் மற்றுக்விழத்
தேய்ந்தன பாவம் செலுக்ககில்லா நம்மைச் செற்றநங்கைக்
கியந்த பிரான் கண்டியூர் எம்பிரான் அங்கமாறினையும்
ஆய்ந்த பிரானல்லானோர அடியேனை ஆட்கொண்டவனே.

6. திருப்பூந்துருத்தி :- கண்டியூரின் மேற்கு (குடமுருட்டி நதியின் தென்கரை) 3கிமீ. ஸ்ரீ புஷ்பவனேசுவரர் கோயில். மேல்திருப்பந்துருத்தியில் உள்ளது. சப்தஸ்தானத்தில் 6வது. அப்பர் உழவாரப்பணி செய்தது. அம்மண்ணை மிதிக்க அஞ்சிய சம்பந்தருக்கு சிவபெருமான், நந்தியை விலகச் செய்து காட்சியளித்தது. இந்திரனும், சூரியனும் சாபம் தீர்ந்திட்டது. வீணாதக்ஷிணாமூர்த்தி வரப்ரஸாதி. ஐயாறைப் போல, இங்கும் தென், வட கயிலாய சன்னதிகள் உள. திருவிசைப்பா அருளிய காடநம்பி அவதாரபதி. நாராயண தீர்த்தர் போற்றியது. சம்பந்தர் பல்லக்கை அப்பர் சுமந்த இடம் - சம்பந்தர் மேடு - அருகிலுள்ளது. (திபுத) (தேத) 613103.

உருவினை ஊழிமுதல்வனை ஓதிநிறைந்து நின்ற
திருவினைத் தேசம் படைத்தனைச் சென்றடைந் தேனுடைய
பொருவினை எல்லாம் துரந்தனைப் பூந்துருத்தி உறையும்
கருவினைக் கண்மூன்று டையானை யானடி போற்றுதுமே

7. திருநெய்த்தானம் (தில்லைஸ்தானம்) — திருவையாற்றின் மேற்கு 2கிமீ. சப்தஸ்தானத்தில் 7வது. ஸ்ரீ நெய்யாடியப்பர் ஆலயம். பசுநெய் அபிஷேகம் சிறப்பு.

காவிரியின் வடகரைத்தலம். நின்ற கோலத்தில் தக்ஷிணாமூர்த்தியும் நர்த்தன கணபதியும் கண்கவர் மூர்த்திகள். இலங்கை அரசர்க்கு குலதெய்வம். (தேத) (திபுத) 613203.

பந்தித்த சடையின் மேலே பாய்புனல் அதனை வைத்து
அந்திப்போது அனலுமாடி அடிகள் ஐயாறு புக்கார்
வந்திப்பார் வணங்கி நின்று வாழ்த்துவார் வாயினுள்ளார்
சிந்திப்பார் சிந்தையுள்ளார் திருந்து **நெய்த்தானனாரே.**

**அந்தணக்குறிச்சியில்** அவதரித்த நந்திகேசர், ருகுள்ள **திருமழபாடியில்** மணமுடிந்த பின், ஊர்வலமாக ருவதே ஏழூர்த்திருவிழா. **சித்ரா பௌர்ணமியை அடுத்த** ிசாக **நக்ஷத்ரத்தில்** நடக்கிறது. நந்தி மனைவியோடு வெட்டிவேர்ச் சிவிகையிலும், ஐயாறப்பர் விசித்திரக்கண்ணாடி பல்லக்கிலும் எழுந்தருளும் போது ஒவ்வொரு ஊர் பெருமானும் அவர்களை எதிர்கொண்டழைத்த பின், தாமும் புறப்பாடாகி, திருவையாறு சென்று பின்னர் தத்தம் ஊர் திரும்புவர்.

**திருமழபாடி :** திருவையாற்றின் வடக்கு (உருவாகவுள்ள அரியலூர் மாவட்டத்தில்) 6 கிமீ லுள்ள திருமானூரின் தெ.மே. 8கிமீ. கொள்ளிடத்தின் வடகரைத் தலம். தென்கரையிலுள்ள **புலியூரி**லிருந்து ஆற்றின் குறுக்கே சென்றால் திருவையாற்றிலிருந்து 6 கிமீ தான். **ஸ்ரீ வம்சிரதம்பேசுவரர் ஆலயம்.** மார்க்கண்டேயருக்காக சிவபெருமான் மழு ஏந்தி நடனமாடிய பதி. பிரம்மலோகத்திலிருந்து புருஷா முருகம் கொணர்ந்த சிவலிங்கம் பிரமனால் எடுக்க

முடியாதபடி நிலைத்து விட்டது. **திருவாலம்பொழிலில்** இருந்த சுந்தரரை இறைவன் **"வர மறந்தனையோ"** என்று ஞாபகப்படுத்திய மூர்த்தி. வெள்ளம் தடுத்த **பிரளயம் காத்த விநாயகர்.** நந்திதேவருக்கும் சுயசைக்கும் மணம் நடந்த பதி. **பங்குனி புனர்வசு** தினத்தில் திருமண விழா நடைபெறுகிறது. அத்திருமணத்திற்கு பல்லூரிலிருந்தும் பல்பொருளும் அனுப்புவித்தவர்களுக்கு நன்றி சொல்வதாக நடப்பதே ஏழூர்த் திருவிழா **(தேத)** 621 851.

இழவாடிச் சுற்றத்தார் எல்லாரும் கூடி
விழவாடி ஆவி விடாமுன்னம் – மழபாடி
ஆண்டானை ஆரமுதை அன்றயன்மால் காணாமை
நீண்டானை நெஞ்சே நினை.

**அந்தணக்குறிச்சி :-** நந்திதேவர் சிலாத மகரிஷிக்கு மகனாக அவதரித்த பதி. திருவையாற்றின் சமீபம்.

## II. சக்கரப்பள்ளியைச் சேர்ந்த ஸப்தஸ்தான க்ஷேத்ரங்கள்

**1. திருச்சக்கரப்பள்ளி :** (அய்யம் பேட்டை) சக்கரமங்கை தஞ்சையின் வடகீழ் 13கிமீ. **ஸ்ரீ சக்ரவாகேஸ்வரர் ஆலயம்.** திருமால் சிவனாரை பூஜித்து சக்ராயுதம் பெற்ற பதி. சக்கரவாகப் பறவை முக்தி பெற்றது. உத்திரமேரூர் சிலாசாசனங்களைப் போல, கிராம நிர்வாகம் பற்றி செய்திகள் தெரிவிக்கும் கல்வெட்டுக்கள் உள்ளன. **(தேத) (திபுத)** 614211.

மின்னினார் சடைமிசை விரிகதிர் மதியமும்
பொன்னினார் கொன்றையும் பொறிகிளர் அரவமும்
துன்னினார் உலகெலாம் தொழுதெழ நான்மறை
தன்னினார் வளநகர் **சக்கரப் பள்ளியே.**

**2. அரிமங்கை :** ஐயம்பேட்டையின் தென்கிழக்கே 2 கிமீ. **ஸ்ரீ ஹரிமுக்தீசுவரர் கோயில்.** சப்தமாதர் சன்னதி விசேஷம்.

**3. சூலமங்கை :** சக்ரபள்ளியின் தென்கீழ் 3கிமீ (பசுபதி கோயில் ரயில் நிலையம் அருகே) **ஸ்ரீ கீர்த்திவாகேஸ்வரர் கோயில்.** சிவனாரின் ஆயுதமாகிட, அஸ்திரதேவர் பணிந்த பதி. **தை மாதம் செவ்வாய்க்கிழமை** தீர்த்தமாடி தரிசித்தல் சிறப்பு **(தேவைத) 614206.**

**4. பசுபதிமங்கை :-** ஐயம்பேட்டையின் தென்மேற்கே 1கிமீ. **ஸ்ரீ பசுபதீசர்** மற்றும் **காசி விசுவநாதர் கோயில்கள்.** மாடக்கோயில். 614201.

**5. நந்திமங்கை (நல்லிச்சேரி) :-** அய்யம்பேட்டையின் மேற்கு 2கிமீ. **ஸ்ரீ சம்புநாதர் கோயில். 614206.**

**6. தாழமங்கை** (கரிக்குளத்தான்கரை) :- ஐயம்பேட்டையின் வடமேற்கு தஞ்சை சாலையில் 3 கிமீ. **காசிவிசுவநாதர்,** பிரம்மபுரீசுவரர், **ஸ்ரீ** சந்திரமௌளீசர் **கோயில்கள். 614 206.**

**7. திருப்புள்ள மங்கை** (பசுபதி கோயில்) :- **ஸ்ரீ பசுபதீசுவரர் கோயில்.** அய்யம்பேட்டையின் வடமே 2 கிமீ. சோழர்காலம். அமுதம் வருமுன்பு, பாற்கடலில் வந்த **ஆலகால விஷத்தை சிவனார் உண்டு அருளிய பதி.**

குடமுருட்டி ஆற்றின் கரையிலுள்ளது. நவக்ரகங்களுக்கு இடையில் நந்தி. மகிஷனை அழிக்கும் கோலத்தில் துர்க்கை பிரசித்தம். பெயரில் புள்ள என்பதற்கு ஏற்ப, கோபுரத்தில் இன்றும் கழுகுகள் வசிக்கின்றன. (தேத) 614206.

மன்னானவன் உலகிற்கொரு மழையானவன் பிழை இல்
பொன்னானவன் முதலானவன் பொழில்சூழ் புளமங்கை
என்னானவன் இசையானவன் இளஞாயிறின் ஜோதி
அன்னானவன் உறையுமிடம் ஆலந்துறை யிதுவே.

அநவித்யநாத சர்மா என்பவர் தினமும், சப்த மங்கையர் பூஜித்த ஏழு தலங்களையும் தரிசித்ததின் தொடர்ச்சியே, பங்குனி, சித்திரை நக்ஷத்ரத்தில் நடைபெறும் ஏழூர் விழா.

## III. கருத்தட்டாங்குடியைச் சார்ந்த ஸப்தஸ்தான க்ஷேத்ரங்கள்

1) கருத்தட்டாங்குடி (கரந்தை) — தஞ்சை நகரின் வட எல்லையை அடுத்தது 1 கிமீ. ஸ்ரீ வசிஷ்டேஸ்வரர் கோயில் கருணாசாமி கோயில் என்று பிரசித்தம். வடவாற்றின் கரையிலுள்ளது. சில தடுத்தாட் கொண்ட தலங்களைப் போல, ஈசுவரன் சிலரை துரத்தியாட்கொண்ட அபூர்வத்தலம். ஒரு வேங்கையிடமிருந்து தப்பிட, குளத்துக்குள் குதித்த கரிகால் பெருவளத்தானின் குட்ட நோயை சிவனார் போக்கிய பதி. நோய் நீக்கும் சூர்யபுஷ்கரிணி தீர்த்தம். மார்கழி ஸ்நானம் மிகுசிறப்பு. அம்மனை தன் வலப்புறத்தில் கொண்ட அற்புத அர்த்தநாரீசுவரர் சன்னதி. (தேவைத) 613002.

**வைகாசி** பிரம்மோத்ஸவத்தில், **கேட்டை நக்ஷத்ரத்தன்று** கண்ணாடிப் பல்லக்கில் ஏழூர்த் திருவிழா நடக்கிறது.

**2. வேளூர் (வெண்ணாற்றங்கரை)** :- தஞ்சையின் வடக்கு திருவையாறு வழியில் 5 கிமீ. **ஸ்ரீ தஞ்சபுரீசுவரர் கோயில்.** கும்பகோணத்தைப் போல சைவ/வைணவக் கோயில்கள் பல அருகருகே நிறைந்த இடம். 3 வைணவ திவ்யதேசம் உடையது. அசுரன் தஞ்சகனை அழித்திட ஈசன் காளியை அனுப்பிய தலம். அக்காளி தான், அருகிலுள்ள **கோடியம்மன்.** பராசரர் தாபித்து வழிபட்ட மூர்த்தி. வில்லேந்திய வேலன் சிறப்பு. **(தேவைத)** 613 003

**3. தென்குடித் திட்டை** :- தஞ்சையின் வடகீழ் 9 கிமீ. **ஸ்ரீ வசிஷ்டேசுவரர் ஆலயம்.** ஊழிக் காலத்திலும் அழியாது திட்டாக இருந்த பதி. அச்சரபாக்கத்தில் தேர் நின்றது போல, இங்கும் சுமாலியின் தேர் நகராமல் நின்றவிடம். **25 நிமிடத்துக்கு** ஒருமுறை விமானத்து சந்திரகாந்தக் கல்லியிருந்து **சிவபெருமான் மீது நீர் சொட்டிக் கொண்டேயிருக்கும்** அபூர்வ அமைப்புடையது. சுயம்பு மூர்த்தி. **(தேத)** 613003.

கருவினா லன்றியே கருவெலா மாயவன்
உருவினா லன்றியே உருபு செய்தானிடம்
பருவநாள் விழவொடும் பாடலோ டாடலும்
திருவினான் மிகுபுகழ் **தென்குடித் திட்டையே.**

**4. கூடலூர்** :- தஞ்சையின் வடகிழக்கு 4கிமீ. **ஸ்ரீ சொக்கநாதர் கோயில்** – 613 003. **(தேவைத)**

**5. கடகடப்பை** :- தஞ்சையின் வடகீழ் 5 கிமீ. (கூடலூரின் தென்கிழக்கு 3 கிமீ) **ஸ்ரீ ராஜராஜேஸ்வரர் கோயில்.** 613003.

**6. புன்னை நல்லூர் :-** தஞ்சையின் கிழக்கு 5கிமீ. (கடகடப்பையின் தெ. 3கிமீ) மிகப் பிரபலமான மாரியம்மன் ஆலயத்தின் தென்புறம் **ஸ்ரீ கைலாசநாதர் கோயில்** உள்ளது. அவதூதரான **சதாசிவ பிரம்மேந்திரர்,** மற்றும் **பாடகச்சேரி சுவாமிகள்** தொடர்புடைய தலம். 613501.

**7. பூமாலை (தஞ்சைக் கீழவாசல் பகுதி) :-** தஞ்சை நகரின் கிழக்கே, பூமால் ராவுத்தர் சந்தில், வடபத்ரகாளி கோயில் அருகே. **ஸ்ரீ பூமால் வைத்தியநாதர் கோயில்.** 613 001.

## IV. திருநீலக்குடியைச் சேர்ந்த ஸப்தஸ்தான க்ஷேத்ரங்கள்

**1. திருநீலக்குடி (தென்னலங்குடி) :-** திருவிடைமருதூரின் தென்கீழ் 4கிமீ. **ஸ்ரீ மானோக்கிநாதர் ஆலயம்.** திருவாவடுதுறை ஆதீன நிர்வாகம். **காலகண்ட சிவன், விஷமுண்டதால் நீலகண்டன் ஆனது.** விஷமுண்ட சிவனின் உடலுஷ்ணத்தை தணிக்க எண்ணி, அம்பிகை அவருக்கு தைலாபிஷேகம் செய்வித்த பதி. **அபிஷேகிக்கும் எண்ணை,** ஒரு சொட்டு கூட, கீழே, **வெளியே வழியாமல் உட்சென்று விடும் அபூர்வ சுயம்பு லிங்கம்.** காமதேனு, பிரமன் மற்றும் பலர் பேறு பெற்ற பதி. சிற்றாயுள் மட்டுமே பெற்ற, மார்க்கண்டேயர் இங்கு வழிபட்டு சிரஞ்சீவித்தன்மை அடைந்த பதி. பிரமிக்க வைக்கும் பிரம்மாண்டமான பலாமரத்தின் பழம் சிவனுக்குப் படைத்தால் மட்டுமே ருசிக்கும். படைக்கத் தவறினால் அழுகிடும். **(தேத)** 612 108.

கல்லினோடு எனைப்பூட்டி அமண்கையர்
ஒல்லைநீர் புகநூக்க என் வாக்கினால்
நெல்லு நீர்வயல் நீலக்குடி அரன்
நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேன் அன்றே.

2. இலந்துறை :— திருநீலக்குடியின் தெற்கு 3 கி.மீ. ஸ்ரீ சுந்தரேசர் கோயில். திருமாலும், வியாசரும் பணிந்தது. செவ்வாய் தோஷ நிவர்த்தித் தலம். தென் பதரிகாச்ரமம் என்ற பெருமை. தலமரம் இலந்தையின் அடியில் வியாசர் வழிபட்ட வியாசேஸ்வரர் சன்னதி சிறப்பு. சித்திரைப் பிறப்பு சமயம் 3 நாள் சூரிய பூஜை. வியாச தீர்த்தத்தில் நீராடி 108 முறை வியாசேஸ்வரரை வலம் வந்து, அபிராமி சன்னதியில் நெய், மாவிளக்கு தீபம் ஏற்றி, முப்பழங்கள் நிவேதித்து, சுவாமியையும், அம்மனையும் 21 முறை சுற்றிய பின் அர்ச்சனை செய்து வழிபட, சகல தோஷமும் நிவர்த்தியாகும். சிறப்பு. கார்த்திகைச் செவ்வாய் பகல் 12–1.30க்குள் நீராடி வழிபட முக்தி உறுதி என்று வியாசர் போற்றியது. 612108.

ஆற்றலறியேன் மிக்க போற்றலறியேன்
நிகழ் ஆகம புராண மறியேன்
தூற்றனேன் உன்னுடைய தோற்றமறியேன்
தூய தோத்திரம் செய்யவறியேன்
ஏற்று நீ என்னுடைய இடர்களைத்
தீர்த்துவை எழில் இலந்துறையினம்மா...

3. ஏனாதிமங்கலம் :- இலந்துறையின் தென்மேற்கு 1 கிமீ. ஸ்ரீ சோமநாதர் கோயில். எமதர்மன் பூஜித்து நன்மையடைந்த தலம். அவரவர் பிறந்த நக்ஷத்திரத்தன்று வழிபட நல்ஆயுள் காக்கும் சிறப்புடையது. திருவிடை மருதூர் புராணத்தில் குறிப்புள்ளது. எம் தீர்த்தமும், கோஷ்ட மூர்த்திகளும் மிகு சிறப்புடையவை. மிகப் பழமை. 612108.

4. திருநாகேச்சுரம் :- திருவிடைமருதூரின் தென்மேற்கு 4 கிமீ. அரிசிலாற்றின் வடகரை. ஸ்ரீ நாகநாதசாமி கோயில். பெரிய புராணம் அருளிய சேக்கிழார் மிகவும் நேசித்த தலம். இவ்வாலயம் போன்று, அவர் குன்றத்தூரில் கோயில் எழுப்பக் காரணமான பதி. அபிஷேகம் செய்கையில் பால் நீலநிறமாகிறது. ராகுவிற்கு தனி சன்னதி. கிரகதோஷ நிவாரணத்தலம். உச்சிகாலபூசை சிறப்பு. கார்த்திகை மாதம் ஞாயிற்றுக்கிழமையில் தீர்த்தமாடுதல் மிகு சிறப்பு. ஒரே நாளில் காலையில் குடந்தையிலும், உச்சி காலத்தில் திருநாகேச்சுவரத்திலும், மாலையில் திருப்பாம்புரத்திலும், அர்த்த ஜாமத்தில் நாகப்பட்டினத்திலும் வழிபடுவது மிகு சிறப்பும் பயனும் உடையது. (திபுத) (தேத) 612204.

கல்லால் நிழல் மேயவனே கரும்பின்
வில்லான் எழில் வேவ விழித்தவனே
நல்லார் தொழு நாகேச்சுர நகரில்
செல்வா என வல்வினை தேய்ந்து அறுமே.

**5. திருபுவனம்** :- திருவிடைமருதூரின் மேற்கு 2 கிமீ. குடந்தையின் கிழக்கே 6 கி.மீ. **ஸ்ரீ கம்பஹரேசுவரர் கோயில்.** தஞ்சை பிரகதீசுவரர் கோயில் போல அமைக்கப்பட்டது. முன் கோபுரத்தை விட கருவறை விமானம் உயரம். தருமையாதீன நிர்வாகம். பட்டுக்கு பெயர் போன ஊர். பரமன் கோயில் சிற்பத்தினாலும் பாரறிந்த ஒன்று. நரசிம்ம மூர்த்தியை சாந்தப் படுத்திய சரபமூர்த்திக்கு மிகப் பிரசித்தமான சன்னதி. பகை நீங்கிடப் பணிவதற்கு ஏற்ற தலம். **(தேவைத) (திபுத)** 612203.

**6. திருவிடைமருதூர்** :- கும்பகோணத்தின் வடகிழக்கு 8 கிமீ. **ஸ்ரீ மத்யார்ஜீனேசுர்** என்ற **மகாலிங்கர் கோயில்.** குடந்தையைச் சுற்றியுள்ள பஞ்சக்ரோச தலங்களில் ஒன்று. மதுரைத் திருவிளையாடல் தொடர்புடையது. வரகுண பாண்டியனின் **பிரம்மஹத்தி தோஷம் நீக்கிய பதி. சிவபெருமான் தன்னைத்தான் பூஜித்த பதி.** மதுரையில் உள்ளது போல, ஒவ்வொரு திருச்சுற்றும் தனிச்சிறப்பு உடையவை. மௌனமாய் தவமியற்றும் மூகாம்பிகை சன்னதியுள்ளது. திருவாவடுதுறை ஆதீன நிர்வாகம். **(தேத) (திபுத)** 612104.

இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்
அம்மை யேற்பிறவித் துயர் நீத்திடும்
எம்மை ஆளும் **இடைமருதன்** கழன்
செம்மையே தொழுவார் வினை சிந்துமே.

**7. மருத்துவக்குடி (இடைக்குளம்)** :- குடந்தையின் வடகீழ் 13 கிமீ. (ஆடுதுறை ரயில் நிலையமருகே) **ஸ்ரீ உடையமருதீசுவரர், ஐராவதீஸ்வரர்** மற்றும் **ஸ்ரீ விசுவநாதர் கோயில்கள்** சுயம்பு. ஐராவதம், ஆதிசேடன், அக்னி பணிந்தது. பதஞ்சலி, வியாக்ரபாதர்க்கு, ஒரு திருவாதிரையன்று, **சிதம்பரக் காட்சியருளிய** பதி. **தக்ஷிண கைலாசம்** என்ற பெருமையுடையது. **ஆவணியிலும், கார்த்திகை திங்கட்கிழமைகளிலும்** சந்திர தீர்த்த நீராடல் சிறப்பு. **(தேவைத) (திபுத) 612101.**

மார்க்கண்டேயரால் துவக்கப்பட்ட திருவிழா. **சித்திரை மாதம் தேய்பிறை விசாகத்தன்று** (திருவையாற்றைப் போலவே) ஏழுர் பிரதக்ஷிணம். ஐயாறில் நந்தி வருவது போல இங்கு மார்க்கண்டேயர் உடன் வருகிறார்.

## V. திருக்கானூரைச் சேர்ந்த ஸப்தஸ்தான க்ஷேத்ரங்கள்

**1. திருக்கானூர்** :- (மணமேடு) திருக்காட்டுப்பள்ளியின் வடக்கு (விஷணம் பேட்டை வழியாக) 4 கிமீ. கொள்ளிடத் தென்கரை. 1924ல், வெள்ளத்தால் மறைந்து விட்ட கோயில் மணல்மேட்டில் காணப்பட்ட தனிக்கரும்பால் மீண்டும் உலகறிய நேர்ந்தது. **ஸ்ரீ கரும்பேஸ்வரர் கோயில்.** ஆலயத்தின் மேன்மைக்கு பெருமுயற்சி செய்த, **வேலூர்-பரமத்தியில்** அவதரித்த **சச்சிதானந்த சாமிகள்.** முக்கால முணர்ந்த காஞ்சி பரமாச்சாரியாரின் அருள்வாக்கினால்,

ஆலயக் குடமுழுக்கில் சரியான நேரத்தில் கலந்து கொண்ட அதிசயம் நடந்த பதி. (தேத) 613105.

தாயத்தார் தமர் நல்நிதி என்னும் இம்
மாயத்தே கிடந்திட்டு மயங் கிடேல்
காயத்தே உள்ள் கானூர் முளையினை
வாயத்தால் வணங்கீர் வினை மாயவே.

2. செந்தலை :– திருக்காட்டுப்பள்ளியின் கிழக்கே (குடமுருட்டியின் தென்கரையில்) 4 கிமீ. திருப்பெருந்துறை மகாதேவர் என்ற ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசர் கோயில். மாணிக்கவாசகர் போற்றும் பெருந்துறை இது தானோ என்ற சந்தேகம் இன்றும் தொடர்கிறது. மிகப்பெரிய கோயில். சதுர்யுகத்தலம். சீர்குலைவோடு காட்சியளிக்கிறது. சக்தி வாய்ந்த சப்த கன்னியரும், சிவாலயத்துள்ளேயே திருமால் அருளும் சிறப்புமுடையது. 18 ஊரார் சேர்ந்து தேரிழுத்த பதி இன்று சிதிலமடைந்து காண்கிறது. 613101.

3. திருக்காட்டுப்பள்ளி :– திருவையாற்றின் மேற்கே கல்லணை வழியில் 16 கிமீ. காவிரி–குடமுருட்டி பிரியும் இடம். ஸ்ரீ அக்னீசுவரர் ஆலயம். பிரமனும், மாலும், பகீரதனும், சூரியனும், அக்னியும் இன்னும் பலரும் வழிபட்டது. பல்யுகத்தலம், திங்கள் தோறும் இன்றும் திருவிழா நடக்கிறது. நால்வருக்கும் குருபூஜை. 5 திருச்சுற்றுக்கள். ஒரே இடத்திலிருந்து இரு தக்ஷிணாமூர்த்திகள் தரிசனம். ஆழத்தில் உள்ள ஈசன்

அளவில் மிகச்சிறியவர். ஆனால் அருள்வதில் அளப்பரிய ஆற்றலுடையவர். அநிது நிர்வாகம். (தேத) = 613 104.

மாட்டைத் தேடி மகிழ்ந்து நீர் நும்முளே
நாட்டுப்போய் யெலாம் பேசிடும் நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியுள்ளான் கழல் சேர்மினே.

**4. நியமம் (நேமம்)** :– திருக்காட்டுப்பள்ளியின் மேற்கு காவிரியின் தென்கரை 4கிமீ. ஸ்ரீ ஐராவதேசுவரர் கோவில் சம்பந்தர் பணிந்தது. ஆனால் பாடல் கிடைக்கவில்லை சதுர்யுகத்தலம். அமுதத்துளிகளால் தோன்றிய பாரிஜாத மரம் அடர்ந்த பகுதி. பிரம்மன், இந்திரன் பணிந்தது. இங்கு இறப்பவர்களின் காதில் பரமேசுவரனே பஞ்சாட்சரம் ஓதி முக்தி அளிக்கும் தலம். பண்டைய நியமம் அழிந்த இடத்தில் கணக்கிலா லிங்கங்கள் காணப்படும் லிங்கத்திடல் உள்ளது அத்தனை லிங்கங்களைக் கொண்ட சிவாலயம் எவ்வளவு பெரியதாக இருந்ததோ. (தேவைத) 613104.

**5. திருச்சினம் பூண்டி (திருக்கடைமுடி)** :– காவிரியின் வடகரையில் திருக்காட்டுப்பள்ளியின் மேற்கே 8கிமீல் உள்ள கோவிலடிக்கு வடக்கே 1 கிமீ. ஸ்ரீ சித்தேசுவரர் கோயில். கொள்ளிடக்கரைத்தலம். பிரமஹத்தி தோஷம் நீக்கும் தலம். தொல்பொருள் துறையார் கட்டுப்பாடு. அருகில் குடியிருப்பு இல்லை. வயல்வெளியில் வரப்பு வழியாகச் செல்ல வேண்டும். (தேவைத) 613105.

**6. திருப்புதகிரி (வானராங்குடி) :-** திருக்காட்டுப்பள்ளியின் வடகிழக்கே கூத்தூர் வழியாக, கொள்ளிடத்தின் தென்கரையில், 4 கிமீ. **ஸ்ரீ நாகநாதசுவாமி கோயில்.** சூரிய பூசை அமைப்புடையது. தேவரும், சித்தரும் பணிந்த பதியில், பானவ தேவன் என்ற சோழன் ஆலயம் எழுப்பியது. வெள்ளத்தால் சிதைந்து வழிபாடு குன்றியவிடம்.

**நித்திய வழிபாடும், பக்தர் வந்து நன்மையடையும் நிலையும் மீண்டும் ஏற்படச் செய்வது நாகநாதன் பொறுப்பு.** 613203.

**7. திருச்சடைவனந்தை (திருச்சடைமுடி) :-** திருக்காட்டுப்பள்ளியின் வடகிழக்கே 4 கிமீ. காவிரியின் வடகரையில் திருவையாறு வழியில் கூத்தூரைத் தாண்டியுள்ளது. **ஸ்ரீ திருவளந்தீச்வரர் கோயில்.** கோயில் கருவறை அடித்தளம் மட்டுமே உள்ளது. **விராலிமலை சுவாமிகள்** தொடங்கிய திருப்பணி முயற்சி சீக்கிரம் முற்றுப்பெற வேண்டும்.

ஒரு ஆங்கிலேயருக்கு ஏற்பட்ட கொடும் வயிற்றுவலியை, இங்குள்ள மண்ணைக் கொடுத்தே, தீர்த்து வைத்த விராலிமலை சுவாமிகள் தன் சமாதிக்காலம் நெருங்கி விட்டதால் திருப்புவனம் சென்று அடங்கி விட்டதாகத் தெரிகிறது. பக்தர்களுக்கு, கோயிலுக்குள் நுழையும் கஷ்டம் கூட வைக்காமல், சிவபெருமான் எல்லோர் கண்களிலும் எப்போதும் பட்டுக் கொண்டு இருக்கிறார்.

**வெய்யிலும், மழையும் அவனுக்கு பொருட்டல்ல. நாம் நனையாமல், காயாமல் இருக்கவாவது சீக்கிரம் கோயிலை உருவாக்க முயல்வோம். (தேவைத)** – 613 203.

கொள்ளிட ஆற்றின் வெள்ளத்தால் குலைந்துபோன கற்றளிகளில் சில, மக்களின் அசிரத்தையால் நெடுங்காலமாக மீண்டும் சீர் பெறவில்லை. வழிபாடும், விழாக்களும் நின்று போய், வௌவால் குடில்களாக மாறிவிட்ட சூழ்நிலையால் இக்கோயில்களில் நடந்த ஏழூர்த் திருவிழா தற்போது வழக்கிலில்லை. மீண்டும் விழா காண, முயற்சித்து வெற்றி பெற **வாய்ப்பு எந்த பக்தருக்கோ- அவனுக்கே வெளிச்சம்.**

## VI. திருக்கஞ்சனூரைச் சேர்ந்த ஸப்தஸ்தான க்ஷேத்ரங்கள்

**1. திருவாவடுதுறை** :- குடந்தையின் வடகிழக்கு 20 கிமீ **ஸ்ரீ மாசிலாமணீசுவரர் கோயில்.** சப்தவிடங்கத் தலங்களில் ஒன்று (நீலவிடங்கர்—கமல நடனம்). வருடம் ஒரு பாட்டாக 3000 பாடல்கள் கொண்ட **திருமந்திரம்** இயற்றிய **திருமூலநாயனார்** அவதரித்த ஊர். அம்பிகை பசு வடிவில் இறைவனை வழிபட்ட பதி. சைவப் பணி மூலம் தெய்வீகம் பரப்பும் ஆதீனம் உடையது. சுந்தரர்க்கு ஈசன், திருவாரூர் தியாகேசனாக காட்சியருளிய பதி. **(தேத) (திபுத)** 609803.

செறிவிலேன் சிந்தையுள்ளே சிவனடி தெரியமாட்டேன்
குறியிலேன் குணமொன்றில்லேன் கூறுமா கூறமாட்டேன்
நெறிபடு மதியொன்றில்லேன் நினையுமா நினைய மாட்டேன்
அறிவிலேன் அயர்ந்து போனேன் **ஆவடு துறையுளானே.**

**2. (தென்) குரங்காடுதுறை** (ஆடுதுறை) :- திருவிடை மருதூரின் கிழக்கு 4 கி.மீ. **ஸ்ரீ ஆபத்சகாயேஸ்வரர் கோயில்.**



8191
Q1:38

சுக்ரீவனும், அனுமனும் பூஜித்த பதி. சிதம்பரம் செல்ல முடியாத முனிவர்களுக்கு சிவபெருமான் தில்லைக் கூத்து தரிசனம் அருளிய பதி. சித்திரை 5,6,7ல் சூரிய பூஜை சிறப்பு. காரிய சித்தியருளும் துர்க்கைக்கு வெள்ளிக்கிழமை இரவில் எலுமிச்சை விளக்கு ஏற்ற விசேஷம். அனுதினமும் ஏழூர் வழிபட்ட ஹரதத்தருக்கு, காவிரியில் வெள்ளம் வந்த போது இங்கே ஏழூர் தரிசனமும் அருளிய சிறப்பு. சொர்ண பைரவர் சிறப்பு. 612101.

நற்றவஞ் செய்த நால்வர்க்கு நல்லறம்
உற்ற நன்மொழியால் அருள்செய்த நல்
கொற்றவன் குரங்காடுதுறை தொழப்
பற்றுந் தீவினையாயின பாறுமே.

3. திருமங்கலக்குடி :- திருவிடைமருதூரின் வடகிழ 5 கி.மீ. ஸ்ரீ பிராணவரதேசுவரர் ஆலயம். திருமணத்தடை நீக்கும் தலம். வரிப்பணத்தால் கோயில் கட்டிய மந்திரி அரச தண்டனைக்குப் பயந்து இறந்தபோது, அவன் மீண்டும் உயிர்ப்பிக்கப்பட்ட தலம். நவக்கிரகங்களுக்கு ஏற்பட்ட குட்டநோய் தீர்ந்தவிடம். அதன் பின்னரே அவர்கள் சூரியனார் கோயிலில் தனித்தனி சன்னதி பெற்றனர். தீராப் பிணியையும் போக்கும் பதி. (தேத) 612 102.

கூசு வாரலர் குண்டர் குணமிலர்
நேச மேது மிலாதவர் நீசர்கள்
மாசர் பால் மங்கலக்குடி மேவிய
ஈசன் வேறுபடுக்க உய்ந்தேனன்றே.

**4. திருமாந்துறை :-** குடந்தையின் வடகீழ் 12 கிமீ. (சூரியனார் கோயில் சமீபம்) சம்பந்தர் பணிந்தது. பதிகம் கிடைத்திலது. **ஸ்ரீ அக்ஷயநாதர் கோயில். (தேவைத) 612102.**

**5. கஞ்சனூர் :- ஸ்ரீ அக்னீசுவரர் ஆலயம்.** ஹரதத்தர் என்பவர், வைணவராகப் பிறந்தாலும், சிவபஞ்சாக்ஷரத்தின் மேன்மையை பல வகையிலும் நிரூபித்த தலம். மதுரையில் கல்யானை கரும்பு தின்றது போல, **கல்நந்தி புல்தின்ற அதிசயம் நடந்த பதி.** மானக்கஞ்சாற நாயனார் பிறந்த தலம். **(தேத) 609 804.**

மூவிலை நற்சூலம் வலன் ஏந்தினானை
மூன்று சுடர்க் கண்ணானை மூர்த்தி தன்னை
நாவலனை நரைவிடையொன் றேறுவானை
நால்வேதம் ஆறங்கம் ஆயினானை
ஆனிலைந்து கந்தானை அமரர் கோவை
அயன் திருமாலானானை அனலோன் போற்றுங்
காவலனைக் **கஞ்சனூர்** ஆண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய் ந்தேனே.

**6, திருக்கோடிக்கா:-** திருவிடைமருதூரின் வடகீழ் 2 கிமீ. **ஸ்ரீ கோடீஸ்வரர் ஆலயம்.** "பெரியகோயில்" எனக் கேட்டால், உடனே வழி கூறுவர். முக்கோடி முனிவர் பூஜித்த தலம். அகத்தியர் வழிபட்ட 'கரையேற்றும் விநாயகர்' சன்னதி. கண்டராதித்த சோழனின் மனைவி செம்பியன் மாதேவி திருப்பணி செய்தது. **-609802.**

காலைக் கலையிழையாற் கட்டித் தாங்கையார்த்து
மாலை தலைக்கணிந்து மைஎழுதி – மேலோர்
பருக்கோடி மூடிப் பலர் அழா முன்னம்
**திருக்கோடிக்கா** அடை நீ சென்று.

**7. திருவாலங்காடு** :– திருவிடை மருதூரின் வடகீழ் குத்தாலம் வழியில் 10 கிமீ. **ஸ்ரீ உத்பலேஸ்வரர் ஆலயம்** மற்றும் **ஸ்ரீ வடவாரண்டேஸ்வரர் ஆலயம்.** உலகன்னையே பரத முனிவரின் குழந்தையாகிட உதவிய புத்திர தீர்த்தமும், புத்திர காமேசுவரர் சன்னதியுமுள்ளது. சத்புத்ர பாக்கியம் அருளும் தலம். **பங்குனி அமாவாசை** வழிபாடு சிறப்பு. திருவாவடுதுறை ஆதீன நிர்வாகம். **(தேவைத)** 609810.

## VII. கும்பகோணத்தைச் சேர்ந்த ஸப்தஸ்தான க்ஷேத்ரங்கள்

**1. குடமூக்கு (கும்பகோணம்)** :– தஞ்சையின் வடகீழ் 40 கிமீ. காஞ்சிக்கு அடுத்ததாக கோயில்கள் அதிகமாக உள்ள தலம். **ஸ்ரீ கும்பேசர் கோயில்.** அமுதமும் மணலும் கலந்திட்ட சிவலிங்கம். ஆறுமுகம் கொண்ட முருகனுக்கு 6 கைகள் மட்டுமே உள்ள அபூர்வ மூர்த்தி. உலகப்ரசித்தி பெற்ற மகாமகக் குளமுடையது. **கோவிந்த தீக்ஷிதர்** திருப்பணி செய்த பதி. **மூர்க்க நாயனார்** அவதாரப் பதி. ஒரு பிரளய காலத்துக்குப் பின் அமுத குடத்தின் மூக்குப்பகுதி விழுந்த தலம். **(தேத) (திபுத)** 612001.

தொண்டராகித் தொழுது பணிமினோ
பண்டை வல்வினை பற்றற வேண்டுவீர்
விண்டவர்புரம் மூன்றொரு மாத்திரைக்
கொண்டவன் உறையும் **குடமூக்கிலே.**

**2. திருக்கலயநல்லூர்** (சாக்கோட்டை) :- குடந்தையின் தென்கீழ் மன்னார்குடி வழி. 4 கிமீ. **கோட்டை சிவன் கோயில்** என்ற **அமிர்தகடேசுவரர் ஆலயம்.** கோட்டையின் இடிபாடுகளே உள்ளன. ஒரு பிரளயத்தின் போது உயிர்கள் எல்லாம் பாதுகாப்பாக இருந்த கலயம் தங்கிய பதி. தக்ஷிணாமூர்த்தி லிங்கோத்பவர், அர்த்தநாரி, மற்றும் **தபஸ்வியம்மன்** சிறப்பு. **(தேத)** 612401.

இண்டை மலர் கொண்டு மணல் லிங்கமது வியற்றி
இனத்தாவின் பாலாட்ட இடறிய தாதையைத் தாள்
துண்டமிடு சண்டியடி அண்டர் தொழுதேத்தத்
தொடர்ந்தவினைப் பணிகொண்ட விடங்கனதூர் வினவில்
மண்டபமும் கோபுரமும் மாளிகை சூளிகையும்
மறைஒலியும் விழைஒலியும் மறுகுநிறை வெய்திக்
கண்டவர் கண்மனங்கவரும் புண்டரிகப் பொய்கைக்
காரிகையார் குடைந்தாடுங் **கலயநல்லூர்** காணே.

**3. திருவலஞ்சுழி** :- குடந்தையின் மேற்கே 6 கிமீ. **ஸ்ரீ வலஞ்சுழிநாதர் கோயில்.** தேவேந்திரன் பூஜித்த தலம். காவிரி வலஞ்சுழித்துப் பாயும் பகுதி. கடல் நுரையால் இந்திரன் தாபித்த, பிரசித்தமான **வெள்ளை விநாயகர்**

அருளும் தலம். மகாசிவராத்ரியன்று ஆதிசேஷன் வணங்கும் தலங்களில் ஒன்று. அஷ்டபுஜகாளியும் பைரவரும் சிறப்பு. பூமியில் ஆழ்ந்து விட்ட காவிரியை, ஏரண்ட முனிவர் மீண்டும் நமக்கு அழைத்து வந்த தலம். (தேத) (திபுத) 612 302.

என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே இருங்கடல் வையத்து
முன்ன நீயுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரிசூழ் திருவலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னியாதரித்து ஏத்தியும்பாடியும் வழிபடும் அதனாலே.

**4. தாராசுரம் :—** குடந்தையின் தெ.மே. 2 கிமீ. ஸ்ரீ ஆவுடைநாதர், ஸ்ரீ காசி விசுவநாதர், ஸ்ரீ ஐராவதேசர் கோயில். ஐராவதம் தன் வெண்மை நிறம் மீளப் பெற்றபதி. தாரன் வழிபட்டது. எமன் வெப்பு நோய் தீர்ந்தமை. கற்றளியில் சிற்பக் களஞ்சியம். ஆலயத்தில் ஒவ்வொரு அங்குலமும் அற்புதச் சிற்பம் உடையது. இரண்டாம் ராஜ ராஜ சோழனையும், ஒட்டக்கூத்தரையும் போற்றச் செய்யும் தலம். இராஜராஜபுரம் தாராசுரமாகி விட்டது. 612702.

ஒரு மருங்குடைய மூலநாயகி
ஒற்றை வெள்விடை ஊர்திமேல்
இருமருங்கு மறை தொழ
எழுந்தருள் இரர்ச ராசபுரி ஈசனே.

**5. சுவாமிமலை :—** குடந்தையின் தெ.மேற்கு 6 கிமீ. ஸ்ரீ மகாலிங்கசுவாமி கோயில். முருகனின் அறுபடை வீடுகளில் ஒன்று. பிரணவ விளக்கம் அருளப்பட்ட தலம். குட்டநோய் தீர்க்கும் தலம். (திபுத) 612302.

**6. கொட்டையூர் :-** குடந்தையின் வடகீழ் சுவாமிமலை வழி 3 கிமீ. ஸ்ரீ கோடீஸ்வரர் ஆலயம். பத்திரியோகி முனிவர்க்கு சிவபெருமான் கோடிவடிவமாக தரிசனம் அளித்த பதி. கோடி தலங்கள் வழிபட்ட பலனை அளிப்புது. எச்செயலுக்கும் கோடி பங்கு பலன் கொடுக்கும் தலம். இதனால் 'கொட்டையூரில் செய்த பாவம் கட்டையோடே' என்ற பழமொழி. (தேத) (திபுத) 612002.

கருமணி போல் கண்டத்தழகன் கண்டாய்
கல்லால் நிழற்கீழ் இருந்தான் கண்டாய்
பருமணிமா நாகம் பூண்டான் கண்டாய்
பவழக் குன்றன்ன பரமன் கண்டாய்
வருமணிநீர்ப் பொன்னி வலஞ்சுழியான் கண்டாய்
மாதேவன் கண்டாய், வரதன் கண்டாய்
குருமணி போல் அழகமருங் கொட்டையூரிற்
கோடீசுரத் துறையும் கோமான் தானே.

**7. மேலக்காவிரி:-** கும்பகோணம் ரயில்நிலையம் அருகே ஸ்ரீ கைலாசநாதர், ஸ்ரீ சங்கரநாராயணர் மற்றும் பிரம்மபுரீசர் கோயில்கள். – 612 002.

## குறிப்பு விளக்கம்

**தேத** – தேவாரப்பதிகம் கிடைத்த தலம்
**தேவைத** – தேவாரத்தில் பெயர்க்குறிப்பு மட்டுமுடையது
**திபுத** – திருப்புகழ் கிடைத்த தலம்
**திவைத** – திருப்புகழில் பெயர்க்குறிப்பு மட்டுமுடையது.

## கடப்பாடு

"அருகுள்ள கோயிலானாலும் அவன் அருளிருந்தால் தான் குடும்பிடமுடியும்" என்று சத்திய வாக்கு. நூலில் குறிப்பிட்டுள்ள எல்லா தலங்களையும் தரிசிக்க வாய்ப்பிக்கவில்லை என்றாலும், அவற்றைப் பற்றி அறிய முடிந்திருப்பதே பெறும் பேறு. அத்திருந்தலங்களை எல்லாம் மனதாலாவது நினைத்து பணிந்திட உதவிய செய்திகளை, நூல்களாகவும், கடிதங்களாகவும், வாய்மொழியாகவும் அளித்திட்ட அனைவர்க்கும் நன்றி.

ஆதாரங்களை தனித்தனியே குறிப்பிட விரும்பினாலும் இடக் குறைவினால் இயலவில்லை.

**நூல் ஆக்கியது அவனே, அவன் அடியார்களே,**
**அடியேன் வெறும் தொகுப்பாளனே.**

## முடிவுரை

"**ஏழடி (கூடி) நடக்க எதிரியும் நண்பன்**" ஆவான்.

நமக்கு நாமே ஏற்படுத்திக் கொண்ட வீடு என்ற சிறையிலிருந்து வெளிவருவோம். வீதியில் எழுந்தருளும் இறைவனை, நம் வீட்டு வாசலிலிருந்து வழிபடுவதோடு நில்லாமல், ஆலயத்திலிருந்து இறைவன் புறப்பாடு ஆவது முதல், இறைவன் மீண்டும் ஆலயம் சேரும் வரை நாமும், விழா நாயகர்களோடு, இயன்ற அளவு, எல்லாத் தெருக்களுக்கும், எல்லா ஊர்களுக்கும் செல்கின்ற எண்ணத்தையும், வாய்ப்பையும் இறையருள் கூட்டட்டும். **- அவனருள்**